29th September 1958] [Sri C. Subramaniam]

(7) The accounts of the panchayat union (education) fund shall be examined and audited by an auditor appointed by the Government under section 141, and the panchayat union council concerned shall carry out any instructions which the Government may issue on the audit report.' "

The amendment was put and carried.

Clause 140, as amended, was put and carried.

Clauses 141, 142 and 143 were put and carried.

MR. SPEAKER : The House will now rise for lunch and meet again at 3 p.m.

The House then adjourned for lunch.

**[After lunch—3 p.m.]**

IV.—GOVERNMENT BILLS—*cont.*

(1) THE MADRAS DISTRICT BOARDS (AMENDMENT) BILL, 1958.
(L.A. BILL NO. 36 OF 1958)—*cont.*

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Mr. Speaker, Sir, I move :

'That the Madras District Boards (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 36 of 1958) be taken into consideration.'

Sir, last year I presented the Madras District Boards (Amendment) Bill, 1957, before the Legislature. According to that Bill, the elections to the district boards were postponed till the 31st of October 1958 and Special Officers were placed in charge of the district boards. We have now introduced the Madras Panchayats Bill, 1958, which makes permanent provision regarding the abolition of the district boards and their replacement by panchayat union councils. This replacement is to take place according to a phased programme which will be completed on the 2nd October 1961.

During this period successive batches of panchayat union councils will be constituted. As soon as they are constituted the functions performed by the Special Officers will devolve upon them and the District Boards Act will be repealed in their areas. But until this programme is completed, there will be need for the continuance of the Special Officers in the areas where panchayat union councils are not yet set up.

Anticipating this contingency we have made provision in clause 196 of the Madras Panchayats Bill. We hoped that this Bill would have become law before the 31st October 1958. But it now appears that according to the programme of this House and the other House, this may not be possible. We are advised that if the Bill becomes law after the 31st October 1958, there will be a gap during which period the proceedings of the Special Officers will have to be validated.

[29th September 1958 [Srimathi Lourdhammal Simon]

This simple Bill has been introduced in order to avoid any such gap. The effect of this Bill is simply to substitute '31st of January 1959' for '31st of October 1958' in the Act as passed last year. Hon. Members may wonder whether it is really necessary to fix the date in January. I am sure, the Bill will be passed into law well before that. But we have fixed the end of January as a measure of abundant caution. I request the House to accept the motion.

MR. SPEAKER: Motion moved—

'That the Madras District Boards (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 36 of 1958) be taken into consideration.'

SRI M. S. SELVARAJAN: ஸார், உத்தேசத் திருத்தத்தின் மூலமாக ஜில்லா போர்டை இன்றையதினம் நிர்வகித்து வரக்கூடிய ஸ்பெஷல் ஆபீஸர் நீடித்து இருந்து வரவும், அக்டோபர் 31-ம் தேதி முடிய என்று இருப்பதை, 1959-ம் ஆண்டு ஜனவரி 31-ம் தேதி வரை நீடிக்கவும் இந்த மசோதா வகை செய்கிறது. அக்டோபர் 31-ம் தேதியே ஜில்லா போர்டுகாலம் முடிவடையும். ஆகவே, இன்றைய தினம் ஜில்லா போர்டுக்கு இருந்து வருகிற பல்வேறு பொறுப்புக்களை பஞ்சாயத்து யூனியன்கள் பகிர்ந்து கொண்டு, அதனால் ஜில்லா போர்டுகளில் சுமை குறையும் என்று எதிர்பார்த்திருந்தார்கள். கணிசமான அளவுக்கு பெருகி வரக்கூடிய, வளர்ந்திருக்கக்கூடிய பொறுப்புக்கள், சுமைகள் நீங்கக்கூடிய காரணத்தினால் அக்டோபர் 31-ம் தேதி அவர்களைப் பொருத்த வரையில் ஒரு நிவர்த்தி நாள் என்று எண்ணிய நிர்வாகஸ்தர்கள் சிலர் இருந்தார்கள். இதைக் கண்டதும் அவர்கள் சோர்வடையலாம்.

எனக்குத் தெரிந்த மட்டில், திருநெல்வேலி ஜில்லாவைப் பொருத்த மட்டில், பல்வேறு அபிவிருத்திகள் காரணமாக, பல்வேறு பஞ்சாயத்துக்கள் ஜில்லா போர்டின் வருமானத்தைக் கொள்ளை கொள்ளக்கூடிய வகையில் ஸ்தாபிக்கப்பட்டதன் காரணமாக, ஜில்லா போர்டுகளின் வருமானம் குறைந்து, அதோடு நிறைந்த பொறுப்புக்கள் ஏற்பட்டன. ஜில்லா போர்டுக் கலாசாலைகளின் அபிவிருத்தி காரணமாக ஜில்லா போர்டுகளில் நிலைமை தட்டுப்படக் கூடியதாக ஆகிவிட்டது. திருநெல்வேலி ஜில்லாவைப் பொறுத்த மட்டில், ஆசிரியர்களுக்கும், அத்தியாவசியமான சிப்பந்திகளுக்கும் கூட காலாகாலத்தில் அவர்களுக்குரிய சம்பளத்தைக் கொடுக்க முடியாத நிலைமை, பொருளாதார வசதிக் குறைவு ஏற்பட்டது. அத்தகைய நிலையில், ஜில்லா போர்டு ஸ்பெஷல் ஆபீஸர் கூட, அவருக்குக் கீழே இருக்கக்கூடிய சிப்பந்திகளைக் குறைத்து, 4 பியூன்கள் இருந்த இடத்தில் சொந்தத்திற்குக்கூட, ஒரு பியூன் போதும் என்று சொல்லக்கூடிய அளவுக்குச் செலவைக் குறைத்துக் கொண்டு, எவ்வளவு சிக்கன நடவடிக்கைகள் எடுக்க முடியுமோ அவைகளை எடுத்தும், தாக்குப் பிடிக்க முடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த மாதிரியான நிலைமை இன்னும் பல்வேறு ஜில்லா போர்டுகளிலும் கூட இருந்து வரலாம். திருநெல்வேலி ஜில்லாவைப் பொருத்த மட்டில் இந்த நெருக்கடி அதிகப்படியாக இருக்கிறது. திருநெல்வேலி ஜில்லா போர்டுக்கு சௌத் இண்டியன் ரெயில்வேயின் ஒரு பகுதியான திருநெல்வேலி திருச்செந்தூர் இணைப்புப் பாதைக்காகக் கொடுக்கப்பட்ட ஈவுத் தொகை கணிசமான அளவுக்குக் குறைந்து விட்டது. அத்துடன் இந்தப் பணத்தை உபயோகிப்பதில் பல்வேறு சிரமங்கள் இருந்து வருகின்றன. ஜில்லா போர்டு ஒரு தீர்மானத்தின் மூலமாக அந்தப் பணத்தை எடுத்துச்செலவு செய்யக்கூடிய அளவுக்குச் சட்டம் இல்லை. மூன்றுதரம் சேர்ந்தார்போல் தீர்மானம் நிறைவேற்றியபணத்தை எடுத்துச் செலவுசெய்வதற்குச் சட்டம் இருக்கிறது. ஆனால் செலவுசெய்யக்கூடியது மூலதனச் செலவுக்காகவே எடுத்துச் செல்வு செய்யலாம் என்கின்ற அளவுக்குச் சட்டம் இருக்கிறது. இது போன்ற சாதாரணச் செலவுகளுக்கு, நடைமுறைச் செலவுகளுக்கு, நிர்வாகச்

செலவுகளுக்கு ரோடு போடுவதற்கான செலவுகள் போன்ற நடைமுறைக் காரியங் களுக்காகச் செலவு செய்ய நினைத்தால் இதிலே சட்ட சிரமங்கள் இருக் கின்றன. இத்தகைய நிலைமையில் திருநெல்வேலி ஜில்லா போர்டு கவுன் ஸில் அங்கு இருக்கக்கூடிய நிலைமையைப் பரிசீலித்தது. சந்தை களின் மூலம் வரக்கூடிய வருமானங்களும் குறைந்து விட்டன. ஊர்க்காரர்கள் தாங்களாகவே சேர்ந்து கொண்டு, கூட்டுப் பொறுப்பில் ஏலம் கேட்க ஆரம் பித்தால், அதிலிருந்து வரக் கூடிய ஏலத் தொகையையும் குறைந்து விட்டது. பெருவாரியான வருமானத்திற்குக் காரணமாயிருந்த சந்தைகள் வருமானம் கூடக் குறைந்து விட்டது. ஆகையால் அரசாங்கத்தினுடைய உதவியை நாடி யிருக்கிறது திருநெல்வேலி ஜில்லா போர்டு. ரெயில்வே ஸெஸ் நிதிப் பணத்தை சட்ட ரீதியான சிரமங்களைப் போக்கி கேபிடல் காஸ்ட் ஆக என்று இருப்பதைத் தளர்த்தி நடைமுறைச் செலவுகளுக்கு உபயோகப் படுத்தினால் தவறில்லை என்ற முறையில் வகை செய்யவேண்டும். அதற்காக ஏதேனும் ஸ்பெஸலாக உதவி செய்யவேண்டுமென்ற நிர்ப்பந்தம் இருக் கிறது. ஜில்லா போர்டைப் பொருத்த மட்டில் பல்வேறு ரஸ்தாக்களை, பல நூற்றுக்கணக்கான புதிய ரஸ்தாக்களை நிர்வகிக்க முடியாத நிலைமை இருக்கிறது. இந்த உதவியை கொடுக்கத் தவறினால் பல ஐந்தாண்டுத் திட்டங்களினாலும் இனி போடப் முடியாத இன்றுள்ளபல ரஸ்தாக்களையும், மற்றைய அபிவிருத்தித் திட்டங்களையும் சரி வரப் பாதுகாக்க முடியாத நிலைமை ஏற்பட்டு விடும். அரசாங்க ரஸ்தாக்கள் ஹைவேஸ் பொறுப்பின் கீழ் எடுத்திருக்கக் கூடிய ரஸ்தாக்கள் முதலிய வைகளைக் கூட நிர்வகிக்க, அந்த ஜில்லாவின் அதிகாரிகளும், ஜில்லா போர்டு கவுன்ஸிலும் கூடி, எல்லா விஷயங்களையும் பரிசீலனை செய்து, அரசாங்கத்தினிடமிருந்து விசேஷ மானியம் வேண்டும் என்று தீர்மானங் களை நிறைவேற்றி, அரசாங்கத்தின் தயவை, உதவியை நாடியிருக்கிறார்கள் 3-10 p.m.
இத்தகைய நிலையில் அவற்றைக் கருணைக் கண்கொண்டுபார்க்கத் தவறு வோமேயானால், நாள் நீடிப்பின் காரணமாக ஜில்லா போர்டின் நிர்வா கமே ஸ்தம்பித்து, அவர்கள் சரிவர நடக்க முடியாத ஒரு கஷ்டமான நிலைமை ஏற்பட்டுவிடலாம். எப்படி திருநெல்வேலி ஜில்லா போர்டுக்கு நிவாரணம் தேவையோ, அதே போன்று இன்னும் பல ஜில்லா போர்டு களும் இருக்கலாம். ஆகவே, இவற்றையெல்லாம் பரிசீலனை செய்து, ஆங்காங்கு ஜில்லா போர்டுகளுக்கு இருக்கக்கூடிய சிரமங்களுக்கு எந்த அளவுக்கு பரிகாரம் தேடிமுடியுமோ, எந்த அளவுக்கு அரசாங்கம் உதவி செய்ய முடியுமோ, அதைச் செய்வது அரசாங்கத்தின் தலையான பொறுப்பு என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

* **Sri C. MUTHIAH PILLAI** : கனம் சபாநாயகர் அவர்களே, சென்ற ஆண்டிலே இன்னும் ஒரு வருட காலத்திற்கு ஜில்லா போர்டின் காலம் நீடிக்கும், அதற்குள் பஞ்சாயத்து யூனியன்கள் வந்துவிடும் என்று கனவு கண்டுகொண்டிருந்தோம். ஆனால் சற்று காலதாமதமாகியும் கூட, இந்த மசோதா வந்திருக்கிற நிலைமையையும், சட்டசபையில் இதைத் திருத்துகிற நிலைமையையும் பார்த்தால் கொஞ்சம் மனதிற்கு கஷ்டமாகத்தான் இருக்கிறது. இவ்வளவு காலம் தாழ்த்தி வந்தும்கூட இந்த பஞ்சாயத்து மசோதாவிலே ஏன் இவ்வளவு திருத்தங்களை செய்யவேண்டும், ஒரு வேளை இந்த மசோதாவைத் தயாரித்திருக்கிறவர்கள் திறமையற்றவர்களாக இருக் கிறார்களோ என்று சந்தேகிக்க வேண்டிய நிலையிலிருக்கிறது. நல்ல காரியம் செய்வதில் பல கஷ்டங்கள் இருந்த போதிலும், எவ்வளவோ கஷ்டப்பட்டு நாம் நல்ல காரியங்கள் செய்யக் காத்துக் கொண்டிருக்கிறோம். இந்த இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வட்டார வளர்ச்சி அலுவ லகங்கள், தேசிய தீவிர சமுதாயத் திட்டம், இவைகள் ஒழுங்காக நடைபெற வேண்டுமானால், இந்த பஞ்சாயத்து யூனியன்கள் நல்ல முறையில் அமைய வேண்டும், அவைகள் காலத்திலே வந்தால் இந்தத் திட்டங்கள் நல்ல வகையில் நிறைவேற்றப்படும் என்று நினைத்தேன். வட்டார வளர்ச்சித் திட்டம் ஆரம்பித்து, தேசிய தீவிர சமுதாயத் திட்டம் முடிவதற்குள் இந்த பஞ்சாயத்து யூனியன்கள் என் பகுதியிலே வரும் என்று எதிர்பார்த்தேன். நூற்றி நாற்பத்திரண்டு தொகுதிகளில் இந்த வட்டார வளர்ச்சிவேலை நடந்து கொண்டு வருகிறது. திட்டம் முடிந்த பிறகு பஞ்சாயத்து யூனியன்

[Sri C. Muthiah Pillai] [29th September 1958

களை அமைத்தால் எப்படி வேலை செய்வோம் என்பது ஒருபுறமிருக்க, மறு புறத்தில் 1961-ம் ஆண்டுக்குள் இந்த பஞ்சாயத்து யூனியன்களை ஆரம்பிக் கப் போகிறோம் என்று சொல்லுகிறார்கள். காலம் கடந்து, திட்டங்களுக் காக அதிகமாகச் செலவழித்த பிறகு, இந்த பஞ்சாயத்து யூனியன் வந் தால், அதற்குப் பிறகு வேலை செய்வது மிகவும் கஷ்டமாக இருக்கும். தீவிர சமுதாயத் திட்டங்களுக்கு அதிகப் பணம் செலவழித்த பிறகு இந்த பஞ்சாயத்து யூனியன்கள் வேலை செய்ய முடியாது என்பதை எல்லோரும் உணர்வார்கள் என்று நினைக்கிறேன். Statement of objects and reasons-ஐப் படிக்கும் பொழுது, 1961-ம் வருடம் அக்டோபர் மாதம் 2-ம் தேதி வரை இது நீடிக்கப்படுமோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. நான் ஒருவேளை சரியாகப் புரிந்து கொள்ளாமல் இருக்கலாம். வட்டார வளர்ச்சி அலுவ லகங்கள் இல்லாத இடத்தில் 1961-ம் வருடம் அக்டோபர் மாதம் வரை நீடிக்கப்படுமோ என்று தோன்றுகிறது. டிஸ்டிரிக்ட் டெவலப்மெண்டு கவுன்சிலுக்கு அதிகாரம் இருந்தால் கூட, ஸ்பெஷல்ஆபீசருக்கு அதிகாரம் இருக்குமா ? வட்டார வளர்ச்சி அலுவலகம் இல்லாத இடங்களில், டிஸ் டிரிக்ட் டெவலப்மெண்டு கவுன்ஸிலுக்கு பூரண அதிகாரத்தை விட்டுவிட்டு, அந்தக் கவுன்சில் சமாளிக்க முடியுமா என்பதை கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, 1959-ம் வருடம் ஜனவரியில் இந்த ஜில்லா போர்டுகள் கலைக்கப்படுமுன்பு—இப்பொழுது ஒவ்வொரு ஜில்லா போர்டும் கடன்பட்டுத் தான் இருக்கிறது, ஸ்தல ஸ்தாபன வேலையாக இருந்தாலும் சரி, ஆசிரியர் கள் சம்பளப் பட்டுவாடாவாக இருந்தாலும் சரி—கடனாளி ஜில்லா போர்டாக அதைக் கலைக்காமல், கலெக்டர் எவ்வளவு தொகை கேட்கிறாரோ அதைக் கொடுத்து, அங்கே இருக்கிற கடன்களைத்தீர்த்து, அதற்குப் பிறகுதான் பஞ்சாயத்து கவுன்சிலிடம் ஒப்படைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். தீவிர சமுதாயத் திட்டங்கள் உள்ள இடங்களிலே இந்த பஞ்சா யத்து கவுன்சிலை உடனடியாக ஆரம்பிக்கவேண்டும். எல்லாச் சட்டங்களுக் கும் கொடுப்பது போல் retrospective effect கொடுத்து தீவிர சமுதாய நலத் திட்டம் இருக்கிற இடங்களில், அக்டோபர் மாதம் 2-ம் தேதிமுத லாவது ஆரம்பித்தால்தான், இந்த பஞ்சாயத்து கவுன்சிலின் அநு கூலத்தை 5, 6 மாத காலமாவது அனுபவிக்க முடியும். பிற்பாடு ரிவெர்ட் பிளாக்கு ஆகிவிட்டால் 75 சதவிகிதம் மக்களும், 25 சதவிகிதம் சர்க்காரும் கொடுக்க வேண்டிய நிலையிலே, இந்த பஞ்சாயத்து கவுன்சில்கள் திறம்பட வேலை செய்ய முடியாது. இந்தக் காலத்திற்குள் இப்பொ ழுது இருக்கிற வட்டார வளர்ச்சி அலுவலகங்களுக்குப் பதிலாக பஞ்சாயத்து கவுன்சில்கள் அமையவேண்டும். ஆகவே அக்டோபர் மாதம் 2-ம் தேதி கண்டிப்பாக இந்த பஞ்சாயத்து கவுன்சில்களை ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

Sri S. LAZAR : கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுதிருக் கிறபடி ஜில்லா போர்டு தனிப்பட்ட அதிகாரிகள் நடத்தி வரக்கூடிய முறையை இன்னும் இரண்டு மாத காலம் நீடித்து வைக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு கொண்டுவரப்பட்ட இந்த மசோதாவை நான் முழு மன தோடு வரவேற்கிறேன். ஏற்கெனவே அமைச்சர் அவர்கள் கூறியதுபோல, இந்த மசோதா வரவேண்டியதன் அவசியம் எல்லோருக்கும் தெரிந்ததே. மற்ற மசோதாக்களைப் போல அவசரமாகக் கொண்டு வந்து, அதன்பிறகு திருத்தங்களைச் செய்வதற்கு முற்படுவதற்குப் பதிலாக, இந்த ஜில்லா போர்டு அமைப்பை மாற்றியமைக்கப் பொறுப்பு ஏற்றுக்கொண்டிருக்கும் அரசாங்கம், இதைப் பரிபூரணமாக நல்ல முறையில் அமைக்க வேண்டு மென்ற நோக்கத்தோடு, இதற்கு ஒரு தனிக் கமிட்டியை நிறுவி, அந்தக் கமிட்டியிலே தீவிரமாக ஆலோசனை செய்து, மிகவும் நல்ல முறையில் அமையவேண்டுமென்ற நோக்கத்தில் இந்த மசோதாவைக் கொண்டு வந்ததால் காலதாமதம் ஆகிவிட்டதாலும், இந்த சபைக்குக் கொண்டு வந்ததற்குப் பிறகும் கூட, இங்கே எல்லா அங்கத்தினர்கள் சொல்லக் கூடிய கருத்துக்களை மனதில் கொண்டு மேலும் அந்தத் தனிக்கமிட்டி யானது தனியாக உட்கார்ந்து, எல்லாக் கருத்துக்களையும் பரிசீலனை செய்

29th September 1958] [Sri S. Lazar]

அவசியமான திருத்தங்களைக் கொண்டுவந்து இந்த மசோதா சிறந்த முறையில் அமையவேண்டுமென்ற காரணத்தினால் இன்றையதினம் எதிர்பார்த்த காலத்திற்குள் முடிக்க முடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. மேலும் இந்தப் பஞ்சாயத்து மசோதாவைப் பற்றி இவ்வளவு அக்கரை எடுத்துக் கொள்வதற்கு மற்றொரு காரணமும் உண்டு. நம்முடைய நாட்டிலேயே மத்திய பிளானிங் கமிஷன் திட்டப்படி, மத்திய சர்க்கார் திட்டப்படி, இந்த பஞ்சாயத்து மசோதாவைப் பொறுத்த வரையில், நம்து மாகாணம் முதன்மையிலே நிற்கிறது. இப்பேர்பட்ட ஒரு மசோதாவை வேறு எந்த ராஜ்யமும் கொண்டுவரவில்லை. நமது ராஜ்யத்தில் தான் முதன்முதலாகக் கொண்டுவரப்படுகிறது. இந்த மசோதா சிறந்த முறையில் அமையவேண்டுமென்கிற எண்ணம் அரசாங்கத்துக்கு இருக்கிற காரணத்தினால் கால தாமதம் ஏற்படுகிறது. குறிப்பாக, இந்த இலாக்கா சம்பந்தப்பட்ட அதிகாரிகள் இதிலே அதிக அளவு அக்கரை எடுத்துக் கொண்டு, பல திருத்தங்களை மற்றவர்கள் கொண்டுவந்த போதிலும், ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற நோக்கத்தோடு அவைகளைப் பரிசீலனை செய்து, அதிக சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதை எல்லோரும் பாராட்டத்தான் வேண்டும்.

இதற்கு வேறு ஒரு மாற்று யோசனையும் இருக்கிறது. ஆனால் அந்த மாற்று யோசனை நல்ல முறையில் இருக்காது என்பதற்காக இந்தப் புதிய மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இப்பொழுது சபை முன் இருக்கிற பஞ்சாயத்து மசோதாவிலே ஒரு பிரிவைச் சேர்த்து, இந்த மசோதா சட்டமாவதற்கு காலதாமதம் ஆனபோதிலும், இடைக் காலத்தில் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் செய்யக்கூடிய காரியங்களை அங்கீகரித்து, பின்னர் அந்த மசோதாவிற்கு திருத்தம் கொண்டு வருவதற்குப் பதிலாக இன்னும் இரண்டுமாத காலத்திற்கு ஜில்லா போர்டுகளின் ஆயுள் நீடித்திருக்கவேண்டுமென்று தனியாகவே ஒரு மசோதா கொண்டுவந்திருப்பதை வரவேற்க வேண்டும். அப்படி ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தால் அது செல்லுமா, செல்லாதா என்ற பிரச்னைகள் எழும். அதற்கு இடம் கொடாமல், இப்படி ஒரு தனி மசோதாவை அவர்களாகவே கொண்டு வந்ததைக் குறித்துப் பாராட்டத்தான் வேண்டும். இந்த ஜில்லா போர்டுகளுக்கு இன்னும் இரண்டு மாத காலத்திற்கு நீடிப்புக் கொடுக்கிற நேரத்திலே, அந்த இரண்டு மாத காலத்திலும் அவர்களுடைய வேலையைச் செவ்வனே செய்வதற்கு தேவையான சகல உதவிகளையும், பணம் இல்லையே என்பதற்காக எந்தக் காரியத்தையும் அவர்கள் விட்டுவைக்கா வகையில், செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

**THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON** : இந்த மசோதாவைப்பற்றி அதிகமாக பேசுவதற்கு அவசியமில்லை என்று நான் நினைக்கிறேன். இந்த மசோதா ஏதோ ஒன்று, இரண்டு பேர்கள் சேர்ந்து அவசரப்பட்டு கொண்டு வரவேண்டுமென்ற நோக்கத்தோடு இந்த சபையின் முன் வைக்கப்படவில்லை. பஞ்சாயத்து பில்லைப்பற்றி எல்லோரும் யோசனை சொல்லுவதற்கு வாய்ப்பு கொடுத்து, அதை ஆரஅமர யோசித்து தக்க முறையில் அமைக்கவேண்டுமென்ற நல்லெண்ணத்தோடு தான் செய்யப்பட்டது. அதனால் தான் அந்த பில்லைக் கொண்டு வருவதற்கு கொஞ்சம் காலதாமதம் ஏற்பட்டது. 3 தினங்களுக்கு முன்னாலேயே இந்த பில் இந்த சபையில் அங்கிகாரம் பெறவேண்டுமென்ற நோக்கத்துடன் கொண்டுவரப்பட்டது. ஆனால், அதிகமாக அங்கத்தினர்கள் அதைப் பற்றி விவாதிக்க வேண்டுமென்று சொன்னதாலும், திருத்தங்கள் அதிகமாக கொடுக்கப்பட்டிருப்பதாலும், இந்த பில்லை பாஸ் செய்வதற்கு இன்னும் கொஞ்சம் நாள் கூடுதலாகிறது. அதனால் குறித்த காலத்தில் இந்த பில்லை சட்டமாக்கி அமுலுக்குக்கொண்டு வருவதற்கு முடியவில்லை. இன்னும் ஒரு மாதத்திற்குள் இந்த பஞ்சாயத்து பில் சட்டமாக முடியாததால், ஜனவரி மாதக் கடைசி வரையிலும் நாள் நீடிப்பு இப்பொழுது கோரப்படுகிறது. [3-20 p.m.]

[Srimathi Lourdhammal Simon] [29th September 1958

இதே சமயத்தில் சில அங்கத்தினர்கள் தங்கள் கருத்துகளைத் தெரிவித்தார்கள். கனம் செல்வராஜ் அவர்கள் ஸ்பெஷல் ஆபீஸர்கள் ஜரூராக வேலை செய்கிறார்கள், சிக்கன முறையை கையாளுகிறார்கள், பியூன்களை குறைத்து நன்றாக வேலை செய்கிறார்கள் என்று சொன்னார்கள். அதைக் கேட்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். இவ்வாறு பொது மக்களும், உத்தியோகஸ்தர்களும் ஒத்துழைத்து சிக்கன முறைகளை கையாண்டால் நாம் எண்ணியிருக்கும் காரியங்கள் நல்ல முறையில் நிறைவேறும் என்று எதிர்பார்க்கிறேன்.

அதுவும் தவிர, இந்த நாள் நீடிப்பது யார் தவறுதலாலும் ஏற்பட்டது அல்ல. கனம் அங்கத்தினர் முத்தையா அவர்கள் பேசும்பொழுது இந்த பில்லை தயாரிப்ப வர்கள் திறமையாக நடந்துகொள்ளாததால் இவ்விதமாக காலதாமதம் ஏற்பட்டது என்று சொன்னார்கள். அதை நான் முற்றிலும் ஏற்க மறுக்கிறேன். அவர்கள் திறமையாக ஊக்கத்துடன் உழைத்ததால் தான் இந்த நிலையிலாவது இந்த பில்லை கொண்டுவர முடிந்தது. இல்லாவிட்டால், இவ்வளவு நிலைக்கு இந்த பில் வந்திருக்க முடியாது. அவர்கள் திறமையாக வேலை செய்ததால் அதை இவ்வளவு சீக்கிரமாக முடித்து சட்ட சபையின் முன்பு கொண்டு வரமுடிந்தது. ஏதோ வெகு சீக்கிரம் இந்த பில்லைக் கொண்டுவந்து முடிக்க வேண்டுமென்று நினைத்தால் ஒரு சிலர் கூடி இதற்கான திட்டங்களை வகுத்து, மற்றவர்களுடைய ஆலோசனைக்கு இவற்றை விடாமல், அங்கத்தினர்கள் இவ்வளவு விரிவாக இதைப் பரிசீலனை செய்வதற்கு இடம் கொடுக்காமல் செய்திருந்தால், இந்த பில்லை எப்பொழுது வேண்டுமானாலும் நாங்கள் தயாரித்திருக்கலாம். அதை இதற்குள்ளாக அமுலுக்குக் கொண்டு வந்தும்கூட இருக்கலாம். ஆனால், அரசாங்கம் அவ்விதமாக நினைக்கவில்லை. இந்த முக்கியமான மசோதாவை எல்லோரும் பரிசீலிக்க அவகாசம் கொடுக்கவேண்டும் என்ற கருத்துடன்தான், இது சபை முன்பு கொண்டுவரப்பட்டு எல்லோரும் விவாதத்திலே கலந்துகொள்ளுவதற்கு அவகாசம் கொடுக்கப்படுகிறது. ஆகையால், நாள் நீடிப்பு கோருவதற்கு யாருடைய தவறுதலும் காரணமில்லை. கவனம் இல்லாததால் ஏற்பட்ட ஒரு நாள் நீடிப்பு அல்ல இது. சட்டசபையின் ஒவ்வொரு அங்கத்தினரும் இதற்கு பாத்தியதை உள்ளவர். எல்லா அங்கத்தினர்களும் இந்த பில்லிலே ஆலோசனை கொடுப்பதற்கு ஆசைப்பட்டார்கள். அவர்களுக்கு ஆலோசனை கூறுவதற்கு வாய்ப்பு கொடுக்கவேண்டும், அங்கத்தினர்களுடைய திருத்தங்களில் நியாயமாக இருக்கக்கூடியவற்றை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்ற நோக்கத்துடன் தான் இந்த மசோதா இந்த சபையில் விவாதிக்கப்படுகிறது. ஆகையினால், இந்த மசோதாவை குறித்த காலத்தில் பாஸ் செய்ய முடியவில்லை. கொஞ்சம் நாள் நீடித்து விட்டது. ஜில்லா போர்டுகளிலுள்ள கஷ்டங்களை நீக்கி, அங்கே வேலைகளை உடனடியாக நடத்தவேண்டுமென்று ஒரு எண்ணம் இருக்கிறது. ஜில்லா போர்டுகளுக்கு கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை அங்கத்தினர்கள் ஏற்கிறார்கள். அந்த முறையிலாவது அங்கு தொல்லைகள் இருக்கின்றன என்று அங்கத்தினர்கள் ஒத்துக்கொள்ளுவது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன். திட்டங்களுக்கு கூடுதலான பணம் தேவையாக இருந்ததால் தான், இந்த முறையை மாற்றி அமைக்கவேண்டும், இலகுவான முறையை கையாளவேண்டும் என்ற நோக்கத்தோடு இந்த மாறுதல்களை ஏற்படுத்தும் பஞ்சாயத்து பில்லை கொண்டுவந்திருக்கிறோம். ஆகவே, இந்த நாள் நீடிப்பு மசோதாவிற்கு அங்கத்தினர்கள் எல்லோருமே தங்கள் ஆதரவை கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER: The question is—

'That the Madras District Boards (Amendment) Bill, 1958, (L.A. Bill No. 36 of 1958) be taken into consideration.

The motion was put and carried and the Bill was taken into consideration.

29th September 1958]

Clause 2 was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, I move—

'That the Madras District Boards (Amendment) Bill, 1958, (L.A. Bill No. 36 of 1958) be passed.'

MR. SPEAKER : Motion moved—

'That the Madras District Boards (Amendment) Bill, 1958, (L.A. Bill No. 36 of 1958) be passed.'

SRI A. GOVINDASAMY : ஜில்லா போர்டுகளில் ஸ்பெஷல் ஆபீஸர்களுடைய ஆயுள் காலத்தை நீடிக்கும் இந்த மசோதாவை வரவேற்று சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இப்பொழுது ஜில்லா போர்டு ஸ்பெஷல் ஆபீஸர்கள் அநேகமாக எல்லா இடங்களிலும் நல்ல விதமாக வேலை செய்கிறார்கள். ஆனால் அவர்களுடைய வேலை நடப்பதற்கு பணமுடை அதிகமாக இருக்கிறது. நான் சொன்ன கருத்தை அமைச்சர் அவர்கள் வரவேற்கிறார்கள். ஆனால், பணம் என்று சொல்லும் பொழுது நிதி அமைச்சர் அவர்களை காட்டக்கூடும். ஜில்லா போர்டுகளுக்கு பணமுடை இருக்கும் காரணத்தினால், அது பற்றி அமைச்சர் அவையும், இந்தக் குழுவும் கூட பரிசீலித்ததாகத் தெரிகிறது. ஜில்லா போர்டுகள் ரயில்வே ஸெஸ் நிதியை உபயோகப்படுத்துவதற்கு அனுமதி கொடுத்தோ அல்லது அவர்களுக்கு கடன் கொடுத்து உதவ முன்வந்தாலோ, ஜில்லா போர்டு ஸ்பெஷல் ஆபீஸர்கள் இருக்கும் வேலைகளை கவனித்து ஏற்கனவே போட்ட திட்டங்களை நிறைவேற்ற முடியும். அதற்கு வேண்டிய வசதியாவது செய்து தரவேண்டுமென்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளுகிறேன். இது சம்பந்தமாக ஒவ்வொரு ஜில்லா போர்டிலும் குறைபாடு இருந்துகொண்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் ஏற்படுகின்ற நேரத்திலே, பஞ்சாயத்து கவுன்சில் ஏற்படாத பகுதிகளுக்கு இப்பொழுது இருக்கிற ஜில்லா போர்டு அட்வைஸரி கமிட்டி அமுலில் இருக்குமா, அல்லது இவைகள் நீக்கப்படுமா என்ற தகவல் கிடைக்கவில்லை. அதுபற்றி கருத்து தெரிவித்து இந்த மசோதாவை நிறைவேற்றிக்கொள்ளும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : இப்பொழுது ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒரு பஞ்சாயத்து அமைக்கப்பட இருக்கிறது. பஞ்சாயத்துகள் அமைக்கப்பட்ட பிறகு, ஒவ்வொரு என். ஈ. எஸ். பிளாக்கிற்கும் ஒரு பஞ்சாயத்து யூனியன் அமைக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு பஞ்சாயத்து பில் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அந்தத் திட்டப்படி எல்லா இடங்களிலும் 1961-ம் வருடம் அக்டோபர் 2-ம் தேதிக்குள் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அமைக்கப்படும் என்று எதிர்பார்க்கிறோம். அந்த தினத்திற்குமுன் எல்லா பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களும் அமைக்கப்படும். அதற்காக திட்டவாரியாக ஒரு நாளோ, மாதமோ குறிப்பிடப்படவில்லை. எந்தெந்த இடங்களில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் அமைக்கப்படுகிறதோ, அப்பொழுது தான் அந்த இடங்களில் ஜில்லா வாரியாக ஸ்பெஷல் ஆபீஸர்கள் கடமைகள் மாற்றி அமைக்கப்படும். அதற்கு வேண்டிய ஷரத்துக்களை இந்த பஞ்சாயத்து மசோதாவில் கொண்டுவந்திருக்கிறோம். அதன்படி திட்டங்கள் கவனிக்கப்படும்.

MR. SPEAKER : The question is—

'That the Madras District Boards (Amendment) Bill, 1958, (L.A. Bill No. 36 of 1958) be passed.

The motion was put and carried and the Bill was passed.